
திருநெல்லை
ஆன்மீகத் திங்களிதழ்
துன்முகி - ஆனி - 2016 - ஜூன்
29.05.2016 அன்று நடைபெற்ற
தெய்வத்திரு. நாச்சியப்ப சுவாமிகளின்
94ஆவது பிறந்தநாள் விழா

உ
சிவமயம்

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

துன்முகி - ஆனி - 2016 - ஜூன்     இதழ் - 48

சிறப்பாசிரியர் :
**மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

ஆசிரியர் குழு :
காப்பியக் கவிஞர் **நா. மீனவன்**
முனைவர். பேரா. **நா. வள்ளி**
பேரா. **நா. சுப்பிரமணியன்**

ஆலோசகர் :
பேரா. தமிழாகரர்.
**தெ. முருகசாமி**

பதிப்பாசிரியர் :
பேரா. **ம. கார்மேகம்**

வெளியீடு :
**கோவிலூர் மடாலயம்**
கோவிலூர் - 630 307.
மானகிரி (அஞ்சல்),
(வழி) காரைக்குடி
சிவகங்கை மாவட்டம்
போன் : 04565 - 236846

அச்சிட்டோர் :
**திருமகள் அச்சகம்**
"ஜெய சௌந்தர்",
7G, ஜவஹர் தெரு, நியூ டவுன்
காரைக்குடி - 630 001.

## பொருளடக்கம்



தனி இதழ் ரூ 10.00
ஆண்டுச் சந்தா ரூ 100.00

உ
சிவமயம்

# இறை வணக்கம்




## அம்புயப் பாதம்

இமயப் பனிவரை இருந்தருள் வானை
ஏற்றுக் களிக்கும் இளங்குயிற் பேடே
எழில்நடம் புரிவான் திருநடம் காணும்
இனியவள் உன்னடி இறைஞ்சுவார்க் கெல்லாம்

நமதருள் உண்டென நாளும் கூறும்
நாயகி நெல்லை நளினத் தாமைர
நல்லடி காட்டும் மெல்லடி மாதே
நண்ணுவார் என்றும் அண்ணுவார் உன்னை

அமையன தோளாய் ஆனந்த வல்லி
அழகிய கழனி வாசலை ஆளும்
அணிதலைக் கென்பார் இனியவை பெறுவார்

சமயச் சான்றோர் சங்கடம் போக்கும்
சங்கரி நீலி சாம்பவி உன்னைச்
சார்ந்தார் என்றும் சந்நிதி வந்து
சாருங் காலை காத்தருள் வாயே

காப்பியக் கவிஞர் கவிமாமணி நற்றமிழ் நாவலர். நா. மீனவன்

# கோயில் திருப்பதிகம்

(புலவர் ஆறு.மெ. மெய்யாண்டவர்)

## தோற்றுவாய்

இறைவனைக் குறித்து எழுந்த நூல்களைச் சாத்திரநூல்கள் தோத்திர நூல்கள் என இரண்டாகப் பிரிப்பது மரபு. சிவஞான போதம் திருக்களிற்றுப் படியார் முதலானவை சாத்திர நூல்கள். தேவாரம் திருவாசகம் முதலியவை திருமுறை நூல்கள், தோத்திர நூல்கள் ஆகும்.

தோத்திர நூல்களில் சாத்திரக் கூறுகள் காணக்கிடைக்கின்றன. ஆயினும் இசையொழுங்கும் இலக்கிய நயமும் அவற்றின் சிறப்பியல்புகள் ஆகும். இவ்வகையில் தமிழில் பல தோத்திர நூல்கள் உள்ளன. எனினும், திருவாசகம் இந்நூல்களிடையே ஈடும் எடுப்பும் அற்றது மனம் கரைத்து மலங்கெடுக்கும் மாண்புடையது. திருவாசகத்துக்கு உருகாதார் ஒருவாசகத்துக்கும் உருகார் எனும் வரி திருவாசகத்தின் சிறப்பைச் சுட்டுவதாகும். திருவாசகத்தில் தோய்ந்த கிறித்துவப் பாதிரியார் ஜி.யு. போப், உள்எலும்பினையும் உருக்கும் பாட்டு என்று வியந்து போற்றினார்.

பாண்டிய நாட்டில் மதுரைக்கு அண்மையில் உள்ள திருவாதவூரில் வாதவூரர் தோன்றினார். கி.பி. மூன்றாம் நூற்றாண்டில் மதுரையை ஆண்ட அரிமர்த்தன பாண்டியனின் அமைச்சராய் இருந்தவர். திருப்பெருந்துறையில் சிவபெருமானே ஞானாசிரியராக எழுந்தருளி அவருக்கு உபதேசம் செய்து மாணிக்கவாசகர் என்ற பெயரும் வழங்கினார். அவர் பொருட்டுநரியைப் பரியாக்கியும் பிட்டுக்கு மண்சுமந்தும் ஆடல் புரிந்தருளினார். இவர் வரலாறு திருவாதவூரர் புராணத்தில் விளக்கமாக கூறப்படுகிறது.

## உள்ளுறை

மாணிக்கவாசகர் பாடிய பாடல்கள் திருவாசகம் 658 திருக்கோவையார் 400 ஆக 1058 பாடல்கள் ஆகும். சைவத் திருமுறைகள் பன்னிரண்டில் எட்டாவதாக வைத்துப் போற்றப்படுகின்றன. நால்வர்நான்மணி மாலையில் சிவப்பிரகாச

சுவாமிகள் வேதத்திற்கும் திருவாசகத்திற்கும் இடையே உள்ள சிறப்பான வேறுபாடு இன்னதெனக் கூறுதல் நுட்பமாக நோக்கத்தக்கது.

விளங்கிழை பகிர்ந்த மெய்யுடைமுக்கண்
காரணன் உரையெனும் ஆரணம் மொழியோ
ஆதிசீர் பரவும் வாதவூர் அண்ணல்
மலர்வாய்ப் பிறந்த வாசகத்தேனோ
யாதோ சிறந்தது என் குவீராயின்
வேதம் ஓதின் விழிநீர்பெருக்கி
நெஞ்சம் நெக்குருகி நிற்பவர்க் காண்கிலேம்
திருவாசகம் இங்கு ஒருகால் ஓதின்
கருங்கல் மனமும் கரைந்(து) உகக்கண்கள்
தொடு மணற்கேணியிற் சுரந்து நீர்பாய
மெய்ம் மயிர்பொடிப்ப விதிர் விதிர்ப்பெய்தி
அன்பர் ஆகுநர் அன்றி
மன்பதை உலகின் மற்றையர் இலரே.

இப்பாடல் மூலம் திருவாசகச் சிறப்பு தெற்றென விளங்கும்.

மாணிக்க வாசகர் பாடிய பல்வேறு பதிகங்களில் 22 - ஆம் பதிகமாய் அமைந்துள்ள கோயிற் றிருப்பதிகம் ஒப்புயர்வற்றது. உணர்ந்து இறைவனை நினைந்து நெகிழ்ந்து மகிழத்தக்கது. ஆவுடையார் கோவிலாகிய திருப் பெருந்துறையை எண்ணித்தில்லை அம்பலமாகிய சிதம்பரத்தில் அருளியது என்பர். எழுசீர் ஆசிரிய விருத்தத்தில் உள்ளம் உருக ஊன் உருகப் பத்துப்பாடல்கள் பாடியுள்ளார். ஒவ்வொரு பாடலின் ஈற்றடியும் அடுத்த பாடலின் தொடக்க அடியாக அமைத்து அந்தாதித் தொடையில் அற்புதமாய்ப் பாடியுள்ளார்.

மாறு பாடாய் என்னுள்ளத்தினுள்ளேநிலை பெற்று ஆணவம், கன்மம், மாயை எனும் மும்மலங்களில் ஒன்றானமாயா மலம் என்னை (என் அறிவை) மயங்கச் செய்து மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகிய ஐம் பொறிகளை இடமாகக் கொண்டு இயங்கும் சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் எனும் ஐம்புல வேடராகிய ஐந்து அறிவை நெறி மயங்கவைத்த மாயா மலத்தின் இயக்க வழியை அடைத்த

அமுதமயமாய் இயங்கும் சிவனே. உள்ளத்தில் அழியா அமுத ஊற்றாய் எழுப்பி உயிர்களின் உண்மையான தன்மையை அறிய வைக்க வந்து அருள்செய்த பேரொளிப்பிழம்பாய் இருக்கும் இறைவனே. சுவைமிக்க தேறலின் தெளிவாய் உள்ளவனே. சிவபெருமானே. திருப்பெருந்துறையில் உறையும் சிவபரம் பொருளே. முடிவில்லாத வீடுபேறு போன்ற பெரும்பதங்களைக் கடந்த பேரின்ப வடிவே. அழியாப்பேரன்பு வடிவானவனே எனும் சிவனும் சீவனுமாய் விளங்கும் பரம்பொருளுக்கும் உயிர்களுக்கும் உள்ள தொடர்பை அற்புதமாய் விளக்கும் முதற்பாடல் இதோ.

மாறி நின்றென்னை மயக்கிடும் வஞ்சப்
புலனைந்தின் வழியடைத்தமுதே
ஊறிநின்றென்னுள் எழு பரஞ்சோதி
உள்ளவா காணவந் தருளாய்
தேறலின் தெளிவே சிவபெருமானே
திருப்பெருந்துறையுறை சிவனே
ஈறிலாப் பதங்கள் யாவையுங்கடந்த
இன்பமே என்னுடை அன்பே.

மேற்கண்ட பாடல் வாயிலாக மாணிக்கவாசகப் பெருமான் சைவ சித்தாந்தத்தின் சாறைப்பிழிந்து நமக்குச் சுவை ததும்பத்தருகிறார்.

உயிர்கள் ஆணவம். கன்மம். மாயை எனும் மும்மலத்தால் பிணிக்கப்பட்டுள்ளன. இம்மூன்று மலங்களைப் பெற்றவர்சகலர் எனப்பட்டனர். ஆணவம். கன்மம் எனும் இருமலங்களால் பிணிப்புண்டவர் பிரளயாகலர் எனப்படுவர். இவர்க்கு மாயையின் காரியமாகிய தநு. கரண. புவன போகங்கள் இருப்பினும் அவற்றால் இவர் தொடமுடியாதவராய் இருப்பார். இத்தகைய ஆன்மாவாய் மாணிக்கவாசகர் விளங்குகிறார்.

மாணிக்கவாசகர் தம் ஐந்தாம் பதிகத்தால் பின்வரும் செய்திகளை அழகொளிர எடுத்தியம்புகின்றார். இறைவனாகிய சிவபரம் பொருள் என்றும் அழியாத குற்றமற்ற அமுது. நிறைவு வடிவமானது. முடிவற்றது. கொழுஞ்சுடர்க் குன்றாம் பேரொளிப்பிழம்பாய் இலங்குவது.

உயிர்களுக்குள் தான் மறைந்து நின்று அவற்றை இயங்கவைப்பது. வேதப்பொருளாகவும் இருப்பது. உள்ளத்தில் நிரந்தரவைப்பாய் இருப்பது. தடுக்கப் படாத நீர்போல் உள்ளத்துக்குள் பேரின்ப வெள்ளமாய்ப் பாயும் திருப்பெருந்துறையில் உறையும் சிவபெருமானே, இறைவனே நீ என் உடலை ஆலயமாய்க் கொண்டு வாழ்கின்றாய், இதற்கு மேல் உன்னை என்ன சொல்லி இரங்குவேன் என மாணிக்கவாசகர் குறிப்பிடுகிறார். அந்த அற்புத அழகுப் பதிகம் இதோ :

குறைவிலா நிறைவே கோதிலா அமுதே
ஈறிலாக் கொழுஞ்சுடர்க் குன்றே
மறையுமாய் மறையின் பொருளுமாய் வந்தென்
மனத்திடைமன்னிய மன்னே
சிறை பெறா நீர்போல் சிந்தை வாய்ப்பாயும்
திருப்பெருந்துறையுறை சிவனே
இறைவன் நீயென் உடலிடங் கொண்டாய்
இனியுன்னை யென்னிரக்கேனே

இப்பாடலில் உலகம் என்றுளதோ, அன்றே இறைவனும் நிறை பொருளாய் உள்ளான் எனும் சைவ சித்தாந்தக் கருத்தும்நீயென் உடலிடங் கொண்டாய் எனும் வரியால் நம் உடலை இறைவன் உறையும் திருக்கோவிலாய் ஆக்க வேண்டும் எனும் கருத்தும் மாணிக்கவாசப் பெருமானால் வற்புறுத்தப்படுகின்றன. திருமூலமும் உள்ளம் பெரும்கோவில் ஊனுடம்பு ஆலயம் எனும் வரியால் இக்குருத்தையே வலியுறுத்துகிறார்.

தம் ஆறாம் பதிகத்தில் ஆகாயம், நீர், நிலம், தீ, கால் ( காற்று ) ஆகிய ஐம்பூதங்களில் மறைந்து நின்று களிப்பை உருவாக்குகிறாய். உன்னைக் கண்ணுறக் கண்டு கொண்டு இன்றேகளித்தனன் எனும் வரிகளால், காணும் கண்ணுக்குக் காட்டும் உளம்போல் காணஉள்ளத்தைக் கண்டு காட்டலின் அயரா அன்பின் அரன் கழல் செலுமே எனும் சிவஞானபோதம் பதினொன்றாஞ் சூத்திரத்தை நம் நினைவில் நிழலாட வைக்கிறார். இப்படி ஒவ்வொரு பதிகமும் ஆன்ம

விழிப்பையும் அகவொளிவழியையும் நமக்கு நல்கிடும் அற்புதத் தமிழ் மறையே கோயிற்றிருப்பதிகமாகும். தம்பத்தாம் பதிகத்தில் நீ உன்னை எனக்குத் தந்தாய் என்னை ஆட்கொண்டாய் இச்செயலில் யார் கெட்டிக் காரர்? முடிவிலாப் பேரின்பம் உன்னால் அடைந்தேன். அதற்கு ஈடாக நீ என்னிடம் என்னபெற்றுக் கொண்டாய். எம் தந்தையே, ஈசயே, என் உடலிடங்கொண்ட உத்தமனே, நீ செய்த இப்பேரருளுக்கு ஈடாய் நான் என்ன கைம்மாறு செய்யப் போகிறேன்? இறைவனுக்கு நாம் ஒன்றும் செய்ய இயலாது. பக்தி ஒன்றே அவன் வேண்டுவது எனும் அற்புத ஆனந்தக் கருத்துகளை உள்ளடக்கிய அந்த அற்புதப் பதிகம் நினைந்து உருகத்தக்கது. உணரத்தக்கது. அப் பதிகத்தைப்பாடி மகிழ்வோம்.

தந்த துன் தன்னைக் கொண்டதென் தன்னைச்
சங்கரா ஆர்கொலோ சதுரர்
அந்த மொன்றில்லா ஆனந்தம் பெற்றேன்
யாதுநீ பெற்ற தொன்றென் பால்
சிந்தையே கோயில் கொண்ட எம் பெருமான்
திருப்பெருந்துறையுறை சிவனே
எந்தையே ஈசா உடலிடங் கொண்டாய்
யான் இதற்கிலன் ஓர் கைம்மாறே

தமிழ் மறையாய்ச் சைவ சமயச் சாரமாய் இலங்கும் திருவாசகம். நாள் தோறும் ஊன் கலந்து உயிர்கலந்து பாடிப்பேரின்பவாயிலை அடையும் அற்புத வழிகாட்டியாய் விளங்கும் திறத்தைப்பின் வரும் பாடல் விளக்குகிறது எனக் கூறி நிறைவு செய்வோம்.

தொல்லை இரும்பிறவிச் சூழுந்தளை நீக்கி
அல்லல் அறுத் தானந்தம் ஆக்கியதே - எல்லை
மருவாநெறி அளிக்கும் வாதவூர் எங்கோன்
திருவாசகம் என்னும் தேன்.



## சித்த ஞானம் (தொடர்ச்சி)

(காப்பியக் கவிஞர் நற்றமிழ் நாவலர். நா.மீனவன்)

திருத்தில்லை - எல்லாம் வல்ல சிவபெருமான் ஆடல் வல்லானாகப் பதஞ்சலியும் வியாக்கிர பாதராகிய புலிக்கால் முனிவரும் காரைக்கால் அம்மையாரும் காணத் தில்லையம்பலத்தில் ஆடுகின்ற காட்சி ஒரு அழகிய கண்காட்சி. என்றினித்தில்லை காண்பேன் தில்லைக்குப் போகாமல் இருப்பேனோ ? என்றெல்லாம் அடியார் பலர் ஏங்கிப் பாடினர். தில்லைக்கு என்று போவாய் ? என்று கேட்டார்க்கு எல்லாம் நாளைப் போவேன் என்று பதில் கூறிய நந்தனார் திருநாளைப் போவார் என்றே அழைக்கப் பெற்றார். அத்தகு பெருமை மிக்க திருத்தில்லையைப் பற்றிப் பட்டினத்தாரும் பாடியுள்ளார்.

உலக நிலையாமை பற்றிச் சங்கரனிடம் கூறி இரங்குவதாகப் பாடி மக்களுக்கு நிலையாமையின் உண்மையை உலகுக்கு உணர்த்துகிறார் பட்டினத்தார். காதற்ற ஊசியும் வாராதுகாண் கடைவழிக்கே என்று திருவிடை மருதூர் இறைவன் கூறிய கூற்றில் உள்ள உண்மையை உணந்த்து அளவற்ற தன் செல்வம் அத்தனையும் அள்ளிச் சூறையிட்டு ஆடையும் மிகை என்று துறந்தவர் பட்டினத்தடிகள்.

காம்பனைய தோள் கொண்ட பெண்கள் மேலும் அளவற்ற பெரும் பொன்னுக்கும் ஆசை கொண்டு உலக இன்பங்களுக்கு மயங்கி ஏங்கித் தவித்துப் பின் இறந்து பிணமானவர்களை இனிமேல் சாம் பிணங்கள் ஒன்று கூடிக் கட்டிப் புரண்டு அழுவதற்கு நான் என் செய்வேன்? தில்லைச் சங்கரனே என்று கேட்கிறார்.

தில்லைக் கூத்தனை வணங்கினால் நாடு நமக்குச் சோறு போடும். தொண்டு செய்யும் தொண்டரைக் காணில் கைகளைத் தலைமேல் வைத்து எப்பொழுதும் முழுநீறு பூசிய முனிவராய் இருப்பர். சிற்றம்பலத்தில் ஆடும் பெருமானின் திருநடனம் காணப்பெறின் கண்களில் நீர் ததும்பும். என் உள்ளமும் நெஞ்சமும் உருகிடும். முடி சூடிய மன்னராயினும் முடிவில் ஒருபிடி சாம்பலாவர். இதனை அன்றாடம் கண்ணால் கண்ட பின்னும் இந்த நிலையற்ற வாழ்வில்

பொன்னம்பலத்தானாகிய நின்னை நினையாமல் இந்த நிலையற்ற வாழ்வை நினைக்கலாமா ? கண்ட இடங்களில் ஓடி அலையாமல் வீணாக உழைக்காமல் உழைக்காதவர்பால் சேராமல் நல்லவர் கூட்டத்தை விட்டு விடாமல் கொடிய கோபத்தை நெஞ்சிலே நாடாமல் நன்மை செய்வதில் தவறாமல் இன்றைக்கு நாளைக்கு என்று செல்வத்தைத் தேடாமல் இப்பொழுதே தருக என்று சிதம்பர தேசிகனாகிய கூத்தப் பெருமானை வேண்டுகிறார் பட்டினத்தார்.

யார்? எவர்? என்று பாராமல் ஏற்கின்றவர்களுக்கு இல்லை என்னாமல் ஏதேனும் குற்றம் கூறி அதனால் பழுது வாராமல் சேவையை விட்டு விடாது அன்பற்றவரைச் சேராமல் இருக்கும்படியான செல்வத்தைத் தருக என்றும் வேண்டுகின்றார்.

காலையில் மலசலம் துன்பம் தரும். கடும்பகல், உச்சியில் சஞ்சிதவினையாக நின்று பசி தாகம் ஆகியன துன்பம் தரும். மாலையில் தூக்கம் துன்பம் தரும். உன்னருளால் இவற்றை நீ மாற்றிவிட வேண்டும்.

பின் வரும் பாடலில் பட்டினத்தார் வேடிக்கையாகப் பாடுகிறார். பிணக்காட்டை இடமாகக் கொண்ட சிவபெருமானை நாம் நெருங்கினால் புலி பாயும் - அரவம் கடிக்கும்.மேலும் அவரைப் பின்பற்றிச் சென்றால் பேயும் கணங்களும் பூதங்களும் பின் தொடரும்.

ஓட்டை எடுத்துக் கொண்டு ஒரு கந்தையையும் கட்டிக் கொண்டு வீடுகள் தோறும் சென்று பிச்சை பெற்று விதியற்றவர்போல் ஆடும் அருளுடையவனாக அம்பலத்தில் இருக்கும் ஆனந்தக் கூத்தனைத் தேடும் கணக்கென்ன கணக்கோ ? சொல் அபிராம சுந்தரியே என்று தேவியிடமும் ஒரு வினாவைக் கேட்டு வைக்கிறார் பட்டினத்தார்.

ஊட்டுவிப்பவன் உறங்குவிப்பவன் ஒன்றுடன் ஒன்றைச் சேர்ப்பிப்பவன் தழுவச் செய்பவன் நம் வினையைக் காட்டுவிப்பவன் நல்வினை தீவினை என்ற இருபாசக் கயிறுகளின் வழி ஆட்டுவிப்பவன் ஒருவன் தில்லை அம்பலத்தே இரக்கின்றான்.

அவன் அடியார்க்கு எளியவன் அவனைப் பணிந்தால் மடியா வரம் பெறலாம். உலகளந்த நெடியோனும் வேதனாகிய நான்முகனும்

காணாத நிலையான நிமலன். அவனுடைய குடிமக்கள் நாங்கள்; அவன் எங்கள் குல தெய்வம்.

தெய்வச் சிதம்பர தேவா நீ மனம் வைத்தால் மன்னர் வாழ்க்கை பொய்யான கனவு போலாய் விடும். உலகமும் இல்லாது போய் விடும். செல்வங்கள் எங்கே? பேரரசர்களின் அரசு எங்கே?

உடுப்பானும் பாலன்னம் உண்பானும் ஒருவரைக் காப்பாற்ற ஏதேனும் கொடுப்பதைத் தடுப்பானும் ஆகிய அனைத்திற்கும் மூலம் நீயே.

பிறவாதிருக்க வரம்தர வேண்டும். அப்படிப் பிறந்து விட்டால் இறவாது இருக்க வரம் தர வேண்டும்.இது எப்படி ஆயினும் ஆகுக.அறத்துடன் புகழ் மிக்க அம்பலவாணரின் அடித்தாமரை மலர்களை மனமே நீ மறவாதிருத்தலே மனமே உனக்கு நல்ல மருந்து.

நெஞ்சமே நீ தவியாது இரு.தில்லை மேவிய சங்கரனையே இவ்வுலகம் சார்ந்துள்ளது. ஞானத்தைத் தருபவனை, திரிபுரம் அழித்தவனை, அணையா விளக்கைப் பொன்னம்பலத்து ஆடியை மனமே நீ மறவாதிரு.ஐந்தெழுத்தால் நீ சேவித்தால் பிறவாமை நீங்கி முத்தி கிடைத்திடும்.

நான்கு வேதங்களின் உட்பொருளான அம்பலவாணப் பெருமானை நம்பி யவரை ஒருதரமாவது அவரைச் சேவிக்காது இருப்பார் எனில் எமதூதர்கள் கருங்கல்லை மேல் வைத்துக் கை விலங்கு பூட்டி மீண்டுமொருகால் காலில் கிட்டியும் கட்டி அடிப்பர்.

கங்கையைத் தலையில் தாங்குவதோடு தும்பை அணிந்தாடும் அம்பலவாணரைப் போற்றாதவர்க்கு ஓர் அடையாளம் உண்டு. அவர்கள் இந்த உலகத்தில் சோற்றின் ஆவியைக் கூடக் காணாது சுகமும் சுற்றமும் இழந்து பிச்சை எடுத்தாலும் கிடைக்காது துன்புற்று இருப்பார்கள்.

வித்தாரம் பேசித் திரிந்தாலும் சோம்பலுற்றுத்திரிந்தாலும் கம்பத்தில் ஏறிக் களைக் கூத்தாடினாலும் தம்முன் தம்பி ஆசையுடன் ஒத்துப் பேசினாலும் ஏதும் ஆவதுண்டோ? தில்லையுள் இருக்கின்ற எங்கும் நிறைந்த ஈசன் சொற்படியன்றி வேறெதுவும் நடப்பதில்லை.

முப்பத்து முக்கோடி தேவர்களுக்கு அதிபதியை நித்தமும் நிலையாக இருப்பவனை அம்மை சிவகாமி சுந்தரி நேசிப்பவனை என் தலைவனைப் பொன்னம்பலத்து ஆடும் ஐயனைக் காணக் கண்கள் எத்தனை கோடி தவங்கள் செய்துள்ளனவோ?

இவ்வாறு உலக நிலையாமையை வலியுறுத்தி மானிட யாக்கை நிலையற்றது என்பதை உணர்த்தி அனைத்தும் செய்ய வல்லவன் அம்பலக் கூத்தனே என்பதை வலியுறுத்துகின்ற பட்டினத்தாரின் பாடல்களைக் கீழே காணலாம்.

காம்பு இணங்கும் பணைத் தோளார்க்கும் பொன்னுக்கும் காசினிக்கும்
தாம்பிணாங்கும் பல ஆசையும் விட்டுத் தணித்துச் செத்துப்
போம்பிணம் தன்னைத் திரளாகக் கூடிப்புரண்டு இனிமேல்
சாம்பிணம் கத்துதையோ? என்செய்வேன் தில்லைச் சங்கரனே

சோறிடும் நாடு துணிதருங் குப்பை தொண்டன்பரைக் கண்டு
ஏறிடும் கைகள் இறங்கிடும் தீவினை எப்பொழுதும்
நீறிடும் மேனியர் சிற்றம்பலவர் நிருத்தம் கண்டால்
ஊறிடும் கண்கள் உருகிடும் நெஞ்சம் என் உள்ளமுமே.

ஓடாமல் பாழுக்கு உழையாமல் ஓரம் உரைப்பவர்பால்
கூடாமல் நல்லவர் கூட்டம் விடாமல் வெங்கோபம் நெஞ்சில்
நாடாமல் நன்மை வழுவாமல் இன்றைக்கு நாளைக்கு என்று
தேடாமல் செல்வம் தருவாய் சிதம்பர தேசிகனே.

பாராமல் ஏற்பவர்க்கு இல்லை என்னாமல் பழுதுசொல்லி
வாராமல் பாவங்கள் வந்தணுகாமல் முனம்அமர்ந்து
பேராமல் சேவை பிரியாமல்அன்பு பெறாதவரைச்
சேராமல் செல்வம் தருவாய் சிதம்பர தேசிகனே.

முடிசார்ந்த மன்னரும் மற்றும் உள்ளோரும் முடிவிலொரு
பிடிசாம்பராய் வெந்து மண்ணாவது கண்டு பின்னும் இந்தப்
படிசார்ந்த வாழ்வை நினைப்பது எல்லாம் பொன்னின் அம்பலவர்.
அடிசார்ந்து நாம் உய்ய வேண்டுமென்றே அறிவார் இல்லையே.

ஓடும் எடுத்து அதன் ஆடையும் சுற்றி உலாவிமெள்ள
வீடுகள் தோறும் பலிவாங்கியே விதியற்றவர்போல்
ஆடும் அருள்கொண்டிங்கு அம்பலத்தே நிற்கும் ஆண்டிதனைத்
தேடும் கணக்கென்ன காண் சிவகாம சவுந்தரியே

ஊட்டுவிப்பானும் உறங்குவிப்பானும் இங்கு ஒன்றோடு ஒன்றை
மூட்டுவிப்பானும் முயங்குவிப்பானும் முயன்றவினை
காட்டுவிப்பானும் இருவினைப் பாசக் கயிற்றின்வழி
ஆட்டுவிப்பானும் ஒருவன் உண்டே தில்லை அம்பலத்தே.

அடியார்க்கு எளியவர் அம்பலவாணர் அடிபணிந்தால்
மடியாமல் செல்வவரம் பெறலாம் வையம் ஏழுஅளந்த
நெடியோனும் வேதனும் காணாத நித்த நிமலன் அருள்
முடிகாணும் நாங்கள் அவர்காணும் எங்கள் குலதெய்வமே

தெய்வச் சிதம்பர தேவா உன் சித்தம் திரும்பி விட்டால்
பொய்வைத்த சொப்பன மாமன்னர் வாழ்வும் புவியும் எங்கே
மெய்வைத்த செல்வம் எங்கே மண்டலீகர்தம் மேடை எங்கே
கைவைத்த நாடகசாலை எங்கே? இது கண்மயக்கே

உடுப்பானும் பாலனம் உண்பானும் உய்வித்து ஒருவர் தம்மைக்
கொடுப்பானும் ஏதென்று கேள்வி செய்வானும் கதிஅடங்கக்
கொடுப்பானும் தேகி என்று ஏற்பானும் கொடாமல்நின்று
தடுப்பானும் நீஅல்லையோ தில்லை ஆனந்தத் தாண்டவனே

பிறவாது இருக்க வரம்தர வேண்டும் பிறந்துவிட்டால்
இறவாது இருக்க மருந்து உண்டுகாண் இது எப்படியோ
அறமார் புகழ்த்தில்லை அம்பல வாணர் அடிக்கமலம்
மறவாது இருமனனே ! அதுகாண்நல் மருந்துஉனக்கே

தவியாது இருநெஞ்சமே தில்லை மேவிய சங்கரனைப்
புவியார்ந்து இருக்கின்ற ஞானாகரனைப் புராந்தகனை
அவியாவிளக்கைப் பொன்னம்பலத்து ஆடியை ஐந்தெழுத்தால்
செவியாமல் நீசெவித்தால் பிறவா முத்தி சித்திக்குமே

நாலின் மறைப்பொருள் அம்பல வாணரை நம்பியவர்
பாலில் ஒருதரம் செவிக்கொணாது இருப்பாரக் கருங்கல்
மேலில் எடுத்தவர் கைவிலங்கைத் தைப்பர் மீண்டுமொரு
காலில் நிறுத்துவர் கிட்டியும் தான்வந்து கட்டுவரே.

ஆற்றோடு தும்பை அணிந்தாடும் அம்பலவாணர் தம்மைப்
போற்றா தவர்க்கு அடையாளம் உண்டே இந்தப் பூதலத்தில்
சோற்றாவி அற்றுச் சுகமற்றுச் சுற்றத் துணைகள்அற்றே
ஏற்றாலும் பிச்சை கிடையாமல் ஏக்கற்று இருப்பார்களே

அத்தனை முப்பத்து முக்கோடி தேவர்க்கு அதிபதியை
நித்தனை அம்மை சிவகாம சுந்தரி நேசனை என்
சுத்தனைப் பொன்னம்பலத்து ஆடும் ஐயனைக் காணக் கண்கள்
எத்தனை கோடியுகமோ தவம் செய்து இருக்கின்றனவே.

*(தொடரும்...)*

## மாணிக்கவாசகரின் அமுதமொழி

(விஸ்வ.புலவர்.மா. சிங்காரம், தஞ்சாவூர்)

உலகில் தொன்மைவாய்ந்த நெறி நம் சிவநெறி; இறைவனைப் போன்றே இந்த நெறியும் தொன்மையானது, அனாதியானது. இஃது எப்பொழுது ? யாரால் தோற்றுவிக்கப்பட்டது? என்று அறியப்படாத ஒன்று. காலப் பழைமையொடு ஞான முழுப் பொருளாகத் திகழவல்ல உயரிய நெறி. ஓதுவார் மனம் கரைந்து மலம் கெடுத்துச் சிவனடியைச் சாரவைக்கும் ஞான சாதனம் திருவாசகம். இதனை வழங்கி உயிர்க் குலத்தை உய்வித்தவர் நம் மாணிக்கவாசகராவார்.

ஞானப் பொக்கிஷமான இதனைத் தில்லைக் கூத்தப் பெருமானே தம் கரத்தால் எழுதினான் என்று நினைக்கும்போது உள்ளுதொறும், உள்ளுதொறும் உணர்வு பரிமளிக்கிறது. போற்றித் திருவகவல் பதிகத்தில் 164, 165 ஆம் வரியாகிய தென்னாடுடைய சிவனே போற்றி! எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி ! என்ற அடிகள் அண்ட சராசரங்களை எல்லாம் அளந்தது. மனித குலத்தையே சிந்திக்க

வைத்தது. சிந்திப்பரியன சிந்திப்பவர்க்குச் சிறந்து செந்தேன் ஆனது. இவ்வாக்கின் உயரிய அடிகளை உலக ஒருமைப்பாட்டுத் தத்துவமாகக்கூட நாம் கருதி மகிழலாம். பிரபஞ்சோப சமம் சாந்தம் சிவம் என்றது வேதம். சிவனியச் சார்பான எந்நிகழ்வாயினும் இம் முழக்க வாசகம் ஞான சிந்தனையினைப் பீறிட்டெழச் செய்யும் என்பதில் ஐயமுண்டோ?

தென்னாடுடைய சிவனே போற்றி என்பது அவ்வழிபாட்டின் தொன்மையினை - அது முதலில் தென்னாட்டிற்கே உரியது என்பதனை, மிக மிக நுட்பமாக உணர்தல் வேண்டற்பாலது. இறைவனுக்கு உகந்த நாடு என்பது மட்டும் இதற்குப் பொருளன்று. பாரொடு விண்ணாய்ப் பரந்து நிறைந்த ஒரே இறைவனைத் தொடர்ந்து எக்காலத்தும் வழிபடும் பெருமை இந்தத் தென்னாட்டிற்கே உரியது என்பது தான் இதன் மையக்கருத்தாகும்.

இந்து சமயம் உலகிற்கு அளித்த தெய்வமே செம்மேனி அம்மான் சிவபெருமான் என்று அருளாளர்கள், சான்றோர்கள் கூறும் நுட்பமான கருத்தை இவ்வடிகள் காட்டுவதாக அமைகின்றன.

இந்த நிலவுலகில் (புவி) ஆகர்ஷணம் அதாவது இறை ஈர்ப்பு, பஞ்சபூத சமநிலை என்பது பாரத பூமியில் குறிப்பாகத் தென்தமிழ் நாட்டினும், வடக்கே இமயமலையைச் சார்ந்த பகுதிகளில் இறைக்கு உகந்ததாக இருப்பதால் தென் பகுதியையும், வட பகுதியையும் இறை ஈர்த்தது என்று நாம் அறிவியல் நிலையிலும், மெய்ஞான நிலையிலும் சிந்திக்க வேண்டும்.

கந்தபுராணத்தில் அருணகிரிநாதர், செஞ்சொல் மாதிசை வடதிசை விஞ்சு புகழ்க் கீழ்த்திசை எனக் குறிப்பிடுவார். அதாவது தமிழ் பேசுகிற திசை என்பார். நம் தென்னாடு பாண்டி மண்டலத்தைக் குறிக்கும் என்பது ஒரு கருத்து. தென்னாடுடைய சிவன் என்ற மணிவாசகத்தார் வாக்கு பிரபஞ்சத்தினின்றும் பரந்து விரிந்து இறையம்ச வெளிப்பாடாக அமைந்துள்ளது என்பதைச் சிறப்பாக நோக்க வேண்டும். இறையீர்ப்பின் சக்தி தென்பகுதிக்கே உரிய ஒன்று. இறைவன் தன் அடியார்கள் எல்லாம் எளிதிற் காணுமாறு உணர்த்த, அந்தணத் திருமேனி தாங்கி

இந்நிலவுலகிற்குப் போந்தருளியது மட்டுமன்று. அவன் அடியவர்கள் வழிபடும் தலமாகிய திருப்பெருந்துறைக்கே வந்து தங்கினான் என்பார்கள்.

இறைவன் அருட் கருணை புரிவதற்காக நமக்காக, நம்மிடத்திலுள்ள குற்றங்களைக் களைவதற்காகத் தன் இருப்பிடத்தை விட்டு இரங்கி வருதல் ஒரு மரபு. நாம் அவனை நோக்கிச் செல்லும் மரபு பக்திமார்க்கமாகிறது. இதனடிப்படையில் இறைவனே! செம்பொருளே! பரம்பொருளே! என்செயலால் ஆவது இனி ஒன்றுமில்லை. தெய்வமே! நின் செயலேயாவும் என உணரும் மனப்பக்குவம் வருங்காலமே இறையுண்மை அறியுங் காலமாகும். மனிதன் தன் சக்தியை, ஆற்றலை, வல்லமையை இறை உணர்வோடு இணைத்துக் கொள்ளும் போது இரை தேடுவதை மறந்து இறையை மட்டும் தேடுவான். ஏகன் அநேகன் என்கிறது மணிவாசகம். ஒன்றாகிப் பலவாகி நிற்கின்ற அந்தப் பரம்பொருள் நமக்கு உடனாகி நிற்கிறது என்பதை நுட்பமாக அறிதல் வேண்டும்.

தென்னன், பாண்டியன் இறைவன் பாண்டி நாடாகிய மதுரையைத் தலைநகராகக் கொண்டு தென்னாட்டை ஆட்சிபுரிந்தான் என்பது வரலாறு கூறும் உண்மை. பிரபஞ்சமே இறை சொரூபமாக இருக்கும்போது அவ்விறைவன் தன்னையும் விளக்கிக் கொண்டு, தான் படைத்த உயிர்களை விளக்க முயற்சி செய்வதற்கு மாணிக்கவாசகர் கருவியாகவும், கருத்தாவாகவும் பயன்படுத்தப்பட்டு உள்ளார். ஏனெனில் மனிதன் இறைவனுக்குச் சொன்ன வாசகமல்லவா நம் திருவாசகம். இது பெருவியப்பல்லவா. இறைவன் மணிவாசகப் பெருமானை ஏன் தன் அணுக்கத் தொண்டராகத் தெரிவுசெய்தார் என்பதைப் பேராசிரியர் சுந்தரம்பிள்ளை அவர்கள் கடையூழி வரும் தனிமை கழிக்கவன்றே அம்பலத்து உடையார் உன் வாசகத்தில் ஒரு பிரதி கருதினரே என்பார். இதன் விளக்கம் யாதோவெனில் ஊழிக்காலத்தில் யாவும் அழிவுக்கு வந்ததன் பின்னர் இறைவன் ஒருவரே எஞ்சி நிற்பார். துணைக்கு அவ் இறைவனுக்கு ஒருவரும் இருக்கமாட்டார்கள். தனியே நாம் இருப்பது ஒரு பெரிய தண்டனையாக இருந்துவிடக் கூடாது என்பதற்காக இறைவன்தான் கைப்பட

எழுதிவைத்த, திருவாசகத்தின் ஒரு பிரதியினை முன்கூட்டியே வைத்திருக்கிறார்.

ஊழி முடிவில், ஒருவரும் இல்லாத நிலையில் ஏகாந்தமாகத் திருவாசகத்தையும், மாணிக்கவாகரையும் பக்கத்தில் வைத்துக் கொண்டால் நலமாகவும், நல்ல பொழுதுபோக்காகவும் இருக்கக் கூடுமே என்று இறைவன் கருதி திருவாசகப் பிரதியைக் கையில் வைத்திருக்கிறாரோ என்று மேல்பாடல் வரியில் அற்புதமாகப் பேராசிரியர் சுந்தரம்பிள்ளையவர்கள் விளக்கம் தருகிறார்கள். இஃது ஊழி கடந்த தொலை நோக்குப் பார்வை அல்லவா? வியப்பின் வியப்பல்லவா?

ஊழி முதலுக்கும், முடிவிற்கும் தென் பகுதியே மூலமாக இருக்கிறது என்பது நாம் உய்த்துணர வேண்டற்பாலது. சிவனிய சக்தி பக்தி அலை அதிர்வுகள் (Vibration) அண்ட சராசரங்கள் முழுமையுமாகப் பரவிப் பரம்பொருள் போல வியாபகமாக இருப்பதை அறியவேண்டும். மாணிக்கவாகசர், திருவாசகத்தின் பொருள் அந்தப் பொன்னம்பலக் கூத்தனே என்று சுட்டிக்காட்டி தில்லையில் சிவசோதியுள் ஒன்றினார் என்ற உண்மையினைச் சிவப்பிரகாச சுவாமிகள் தம் வாக்காக,

பெருந்துறை புகுந்து பேரின்ப வெள்ளம்
மூழ்கிய புனிதன் மொழிந்தவாசகமே
வாசகம் அதற்கு வாச்சியம்
தூசகலல்குல் வேய்த் தோளிடத்தவனே

என்று சிறப்பிப்பார். நமது குமரகுருபர சுவாமிகள்,

பைந்தமிழ் நவின்ற செந்நாப் புலவன்
ஐந்திணை உறுப்பின் நாற்பொருள் பயக்கும்
காமஞ் சான்ற ஞானப் பனுவற்குப்
பொருள் எனச் சுட்டிய ஒருபெருஞ் செல்வ

என்று சுட்டுவதையும் அறிதல் வேண்டும்.

நமது வள்ளல் பெருமகனார், மாணிக்கவாசகரே! தாங்கள் எல்லோரும் மண்ணிலே (பிறந்து) கலக்க வான்வெளித் தலமாகிய தில்லையில் கலந்தீர்! வானிலும் கலந்தீர்! அற்புதம். அதனாற்றான் வான் கலந்த மாணிக்க வாசகர் எனக் குறிப்பிட்டுச் சிந்தை மகிழ்வார். சிவனியச் சார்புடைய இத்தகைய அரிய நிகழ்வு எல்லாம் தென்னாட்டிலே மலர்ந்தது. வருமொழி செய் மாணிக்க வாசக என் வாசகத்தில் ஒரு மொழியே என்னையும் எனை உடையவனையும் ஒன்றுவித்துத் தருமொழியாம் என உளம் பூரித்து மகிழ்வார்.

வான் கலந்த மாணிக்க வாசக என்ற சொற்றொடர்ப் பொருள் ஆன்றோர்கள் வாக்கில் பலவாறாக விதந்தோதப்படுகிறது. திருவாசகத்தை ஒருமுறை ஓதினால் போதும் பிறவிப் பயனை அடைந்துய்யலாம். ஞால முழுப் பொருளாக, எந் நாட்டவரையும் உய்விக்கவல்ல திருவாசகம் தென்னாட்டில் கருவாகி உருவாகி உளதாய் இலதாய் சிவனியப் பெருஞ் சொத்தாக உலக உயிர்களுக்கு மெய்ப்பொருளாக இருக்கிறது. எந் நாட்டவர்க்கும் ஓரிறை என்பதைப் பறைசாற்றி வருகிறது. நோக்கரிய நோக்காய் நுண் உணர்வால் அறிவார்க்குப் புலனாகும் அற்புதமாகும் இது. உலகம் பலவிதம், உலகம் அம்பலவிதம். அம்பலத்திலே இறைவன் நர்த்தனமிடுகிறார். உலகம் அசைகிறது. அப்படி உலகம் அசையும் பொருட்டு அம்பலத்திலே அம்பலவாணன் ஆடலரசன் அசைகின்றான் எனக் கூறுவார் நம் வாரியார் சுவாமிகள். பிரபஞ்சமே சிவனிய வியாபகமாக இருக்கும்போது துவைதப்படுத்தி இறையை வேறுபடுத்திக் காணும் உணர்வு பேதைமை அல்லவா? உலக மக்கள் தோற்றத்திற்கும், முடிவிற்கும் காரண கர்த்தாவாக விளங்கும் பரமேஸ்வரனை வழிபடுகின்ற தூய நெறியே செந்நெறி, அந்நெறி நின்றே நம் திருமூலர் ஒன்றே குலமும் ஒருவனே தேவனும் என்றார். ஒருவன் என ஏத்திநின்ற நளிர் மதிச் சடையன் என்பார் நம்மாழ்வார். இன்றைய உலக நாடுகள் எல்லாம் ஒருவனே தேவன் என்ற மூலனின் கூற்றில் ஒன்றி உள்ளதை அறியலாம். இதனை உறுதி செய்யும் முகத்தான் உலக நாடுகளில் ஆஸ்திரேலியாவை அகத்தியராலயா எனவும், அரேபியாவிலுள்ள மக்கா, மதினாவை, மக்கீஸ்வரம், மத்தீஸ்வரம் என்ற பெயரிலும், அயர்லாந்தை, அயனீச்சுரம் என்றும் கூறுவதிலிருந்து இந்த

நாடுகள் சிவ ஸ்தலங்களாக விளங்கிய அருமையினை நம் வாகீசப் பெருந்தகையார் தேவாரத் திருப்பதிகத்தில் விதந்து ஓதி இருப்பதை அறியும்போது நமக்கு வியப்பு மேலிடுகிறது. குக்குடேச்சுரம் அகத்தீசுரம் அயனீச்சுரம், மத்தீசுரம், சித்தீஸ்வரம் தண் கானல் நடுதிரை இராமேச்சுரம் என்று என்று ஏத்தி, இறைவன் உறை சுரம் பலவும் இயம்புவோமே எனப் பாடிப் பரவுவதைக் காணலாம்.

தமிழகத்தில் உமையம்மை மயிலாக வந்து பூஜை செய்து வழிபட்ட மயிலாப்பூர் போன்று, மகா விஷ்ணு நரசிம்மாவதாரத்தில் சிவனைப் பூஜை செய்து வழிபட்ட தலமே இன்று சிங்கப்பூராக உள்ளது. அரசு நாடான குவைத் நாட்டில் சிவன் கோயில் பல பெருகி இருந்ததைக் குவைப்பதி மலிந்த கோவே போற்றி! எனவும், ஒருவன் என்னும் ஒருவன் காண்க, தென்னாடுடைய சிவனே போற்றி! எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி! எனவும் நம் மணிவாசகர் பாடுவார். திருக்கேத்தீச்சுரம், திரிகோணமலை ஆகிய இலங்கைத் தலங்களைத் தேவாரப் பதிகங்கள் துதிசெய்கின்றன.

மாறாத தென்திசை வையம் சுத்தமே
மன்னுமாமலை மகேந்திரமதனில்
சொன்ன ஆகமம் தோற்றுவித் தருளியும்

என்று திருவாசகம் துதிப்பதையும் காண வேண்டும். எந்நாட்டவர்க்கும் இறைவன் தென்னாடுடைய சிவனே என்பதை உறுதிசெய்யும்.

பன்னிரு திருமுறைகள் உலகின் பல பகுதியிலுள்ள சிவத்தலங்களையும், சிவ வழிபாட்டினையும் கூறுவதிலிருந்து அதன் காலஞ்சான்ற பழைமையினையும் நாம் அறியலாம். குவைப்பதி (குவைத்) மக்கா மக்கீசுரம், அயர்லாந்து, அயனீசுரம், அகத்தீசுரம் (ஆஸ்திரேலியா) ஆகிய உலகெங்கும் கிடைத்துள்ள புதைபொருள் சான்றுகள் சிவனை விழிபட்டு வந்துள்ளதைச் சுட்டுகின்றன. வட அமெரிக்கா கொரைடா என்ற ஆற்றங்கரையின் அருகாமையில் உள்ள குன்றின்மீது 1000 ஆண்டுக்கும் மேற்பட்ட பழமையான சிவன் உறை ஆலயங்கள் கண்டறியப்பட்டு உள்ளன. இத்தாலியில் ஐந்தாயிரம்

ஆண்டு பழமையான சிவலிங்கங்கள் அங்குள்ள அருங்காட்சியகத்தில் வைக்கப்பட்டுள்ளன. ஸ்காட்லாந்து, அயர்லாந்து, எகிப்து, திபெத், சீனா, பூட்டான் மெக்சிக்கோ ஆகிய நாடுகளிலும் சிவ வழிபாடு இருந்தது என்பதை உரிய வரலாற்று ஆவணங்கள் இடங்களிலும் எண்ணற்ற சிவலிங்கங்கள் கிடைத்திருப்பதாகப் புதைபொருள் வல்லுநர்கள் தெரிவிக்கின்றனர். முகம் அஞ்சு ஓதரான் = ஐந்து முகங்களால் ஓதுபவன் பரமேஸ்வரன் அதனால் மொகஞ்சோதரா என்றாயிற்று. ஆதாரம் டாக்டர் சிவப்பிரியா - திருக்குறளும், திருமுறைகளும் என்ற நூல்

இவ்வாறாகத் தென்நாட்டவர்களின் சிவன் எந்நாட்டவர்களுக்கும் உரியவன் என்று உறுதிப்படுத்துகின்றது. உலக நாட்டு மக்கள் அனைவரும் ஒரே குடை நிழலில், பொய்த் தவமும், போலிச் சமயமும் இன்றிப் பிரபஞ்ச வியாபகமாக உள்ள பரமேஸ்வரனைப் பண்டு தொட்டு வழிபட்டு வந்திருக்கின்றனர். உலக நாடுகள் முழுமையும் நிறைந்திருந்த அடியார்களை அப்பாலும் அடிசார்ந்த அடியார்கள் எனத் திருத்தொண்டத் தொகை கூறுவதிலிருந்தும் தென்னாடுடைய சிவன் எந்நாட்டினர்க்கும் உரியன் என்ற மணிவாசகர் கூற்றாலும் தெளியலாம்.

இன்றளவும் இயற்கை நெறியதனில் நின்று உண்மையான மெய்க்கடவுளை வழிபடும் நாடாகவும் உலகிற்கே ஆன்மிக அருட்பிரசாதம் வழங்கிய பாரத நாடு பழம்பெருமை மிக்க நாடாகவும், புண்ணிய பூமியாகவும் புகழ்பெருமை மிக்க நாடாகவும், புண்ணிய பூமியாகவும் புகழ்பெற்றுத் தெய்விகத்தில் மேலோங்கிச் சிறந்து நிற்கிறது.

*(நன்றி : குமரகுருபரர் இதழ்)*

---

**குறிப்பு :** சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகளின் உடல்நிலை சரியில்லாததால் இந்த மாதம் ஆசியுரை இடம் பெறவில்லை.

*- பதிப்பாசிரியர்*

# மடாலய நிகழ்வுகள்

29.05.2016 அன்று தெய்வத்திரு நாச்சியப்ப சுவாமிகளின் 94ஆவது பிறந்தநாள் விழா கோவிலூர் மடாலய வளாகத்தில் நடைபெற்றது. முற்பகல் 9.30 மணி முதல் திருக்குறள், முற்றோதல் நிகழ்வு அமைந்தது. பிற்பகல் 4.00 மணி முதல் திருக்களர் ரத்தினசபாபதி ஓதுவாரின் மாணவர்கள் மற்றும் குடும்பத்தினர் கலந்து கொண்டு தேவார இன்னிசை வழங்கினர். 6.05 மணியளவில் நாச்சியப்ப சுவாமிகளின் பிறந்தநாள் விழா நிகழ்ச்சி சுவாமிகளும் விருந்தினர்களும் குத்துவிளக்கு ஏற்றி வைக்கத் தொடங்கியது. செல்வியர் கவிதா, கவிச்சித்ரா இறைவணக்கம் பாடினர். விழாவின் தொடக்கத்தில் காப்பியக் கவிஞர் நா. மீனவன் வரவேற்புரை நிகழ்த்தினார்.

சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள், ரத்தின சபாபதி ஓதுவார் எழுதிய பன்னிரு திருமுறையில் தோத்திரம் என்னும் நூலை வெளியிட்டு ஆசியுரை வழங்கினார். அறங்காவலர் திரு.அ. இராமநாதன் நூலைப் பெற்றுக் கொண்டு வாழ்த்துரை வழங்கினார். உயர்திரு. நீ.சு. சுந்தரராமன் நூலை அறிமுகப்படுத்தி உரையாற்றினார். ஓதுவாரின் மகன் திரு. விசுவநாதனும் முத்துராமலிங்க ஆண்டவர் மழலையர் மற்றும் தொடக்கப் பள்ளியின் தலைமை ஆசிரியை திருமதி. மணிமொழி முருகனும் நாச்சியப்ப சுவாமிகளின் நினைவுகளைப் பகிர்ந்து கொள்ளும் வகையில் உரையாற்றினர். ம. கார்மேகம் நன்றியுரை நவின்றார். புலவர் மெய்யாண்டவர் நிறைவு வாழ்த்துப் பாட விழா இனிதே நிறைவுற்றது.

# திருவிளையாடற்புராணம்

## இந்திரன் பழி தீர்த்தது

அன்றொருநாள் கிரேதா யுகத்திலே தேவர் கோனாகிய இந்திரன் சுவர்க்க லோகத்திலே மந்தாரநிழலின் கீழ் வீற்றிருந்தான். அது சமயம் அவன் முன்பு மயிலைப் போன்ற சாயலையுடைய, அன்னம் போன்ற நடையுடைய தேவமாதர் நாட்டியம் ஆடிக் கொண்டிருந்தனர். இன்பமயமான கீதங்களைப் பாடிக் கொண்டிருந்தனர். நாட்டியக் காட்சியும் இசையின்பமும் தேவேந்திரனைப் பெரிதும் கவர்ந்துவிட்டன. சந்தோஷம் என்னும் பெருங்கடலுள் மூழ்கிவிட்டான். தன்னையே மறந்துவிட்டான். அந்தச் சமயம் பார்த்துத் தேவகுருவாகிய வியாழ பகவான் அங்கு வந்து சேர்ந்தார். அவர் சிவபெருமானுக்குச் சமமான பெருமை உடையவர். அவர் வருவதைக்கண்ட இந்திரன் பெண் மயக்கத்தினாலே மதிமயங்கித் தனது சிங்காதனத்தை விட்டு எழுந்து வரவேற்று உபசாரம் செய்யாது இருந்துவிட்டான்.

தேவேந்திரனது அலட்சியப் போக்கைக் கண்ட வியாழ பகவானும் அங்கிருந்து விரைவாகச் சென்றுவிட்டார். அப்பொழுதிருந்து தேவேந்திரனுடைய ஐசுவரியம் மங்கிக் குறையத் தொடங்கியது. அப்பொழுது இந்திரன் தனது பெருங்குற்றத்தை உணர்ந்து கொண்டான். தனது குருவைத் தேடிச் சென்றான். எல்லா உலகங்களிலும் சென்று தேடினான். கடைசியாக நான்முகனாகிய பிரம்மா வாழ்கின்ற சத்தியலோகம் சென்றான். அங்கும் வியாழ குருவைக்க காண முடியவில்லை. ஒன்றும் தோன்றாதவனாகி மிகுந்த மனக் கலக்கத்துடன் பிரம்மாவின் முன்னால் விழுந்து வணங்கினான். பிறகு நடந்தவற்றை எல்லாம் சொன்னான். அதைக்கேட்ட பிரம்மன் குருவை அவமதித்த பாவம் கொழுந்துவிட்டு உயர்ந்து தேவேந்திரனை விழுங்கவரும் காலம் நெருங்கிவிட்டதை உணர்ந்தார். ஆதலால் இந்திரனைப் பார்த்து, "வியாழனைப் பார்க்கும் வரையிலும் துவஷ்டா வின் குமாரனும், மூன்று தலைகள் கொண்டவனும், அசுரனாகப் பிறந்தாலும் அறிவிலும் ஒழுக்கத்திலும் சிறந்தவனுமாகிய விசுவரூபன் என்பவனை உனது குருவாக ஏற்பாயாக" என்று சொன்னார்.

பிரம்மாவின் சூழ்ச்சியைத் தெரிந்துகொள்ள மாட்டாத இந்திரன் வணங்கி விடைபெற்றுச் சென்றான்.

தன்னிடம் வந்த தேவேந்திரனைத் தனது சிஷ்யனாக ஏற்றுக்கொண்டு விட்டது போலவே நடக்கத் தொடங்கினான் விசுவரூபன். விசுவரூபன் தனது மனத்திலே வஞ்சகம் உடையவனாகவே இருந்தான். என்ன இருந்தாலும் அசுரனல்லவா? பின்பு ஒருநாள் தேவேந்திரன் விசுவரூபனிடம் யாகம் ஒன்று செய்துதருமாறு வேண்டினான். யாகம் செய்துகொண்டிருக்கும் போது அந்த அசுரனும் உள்ளொன்று வைத்துப் புறமொன்று செய்தான். "அசுரர்கள் அனைவரும் உய்யவேண்டும்" என்று தன் மனத்திலே நினைத்து "தேவர்கள் வாழ்வதாக" என்று வெளியே சொல்லி யாகம் செய்தான்! இந்த வஞ்சகச் செய்கையைத் தேவேந்திரன் தனது ஞான திருஷ்டியால் அறிந்துகொண்டான். உடனே தனது வச்சிராயதத்தை வீசி விசுவரூபனது மூன்று தலைகளையும் வெட்டி வீழ்த்தினான். அசுரனாயிருந்தாலும் பிரம்ம குலம் அல்லவா ? பிரம்மஹத்திப் பாவம் விரைவாக வந்து இந்திரனைப் பிடித்துக் கொண்டு விட்டது. மிகப் பெரிய கஷ்டங்களுக்கு ஆளாயினான் இந்திரன். தேவர்கள் எல்லாரும் சேர்ந்து தங்கள் தலைவனது பிரம்மஹத்தி தோஷத்தை மரங்கள், மண், பெண்கள், நீர் ஆகிய நான்கிற்கும் பங்கிட்டுக் கொடுத்துவிட்டான. தோஷம் நீங்கிய தேவர்கோன் தனக்கு ஏற்ற பொலிவைப் பெற்றான்.

தனது குமாரன் விசுவரூபன் தேவேந்திரனால் கொல்லப்பட்ட செய்தியைக் கேட்ட துவஷ்டா மிகுந்த கோபம் கொண்டார். பழிவாங்கும் எண்ணத்தோடு கொடிய யாகம் ஒன்றைச் செய்தார். அந்த யாகத்தீக் குழியிலிருந்து விருத்திராசுரன் என்பவன் தோன்றினான். கோர உருவத்தோடும், கையிலே கொடிய வாளோடும், கோபக்கனல் பறக்க, திசைகள் அதிரச் சிரித்துக்கொண்டு நின்றான். நாள்தோறும் அவன் பெருகி வளர்ந்துகொண்டே வந்தான். ஒருநாள் துவஷ்டா விருத்திராசுரனைப் பார்த்து "தேவேந்திரனோடு போர் செய்து அவன் உயிரைப் போக்கிவா" என்று ஏவி விட்டார்.

வடவைப் பெருங்கனலைப் போன்ற சினம் கொண்டெழுந்த




கூறி வழி கேட்டான். தேவர்தம் துயரைப் போக்கி அவரைக் காக்கும் எண்ணம் கொண்ட மகாவிஷ்ணுவைப் போன்ற அகஸ்திய மகரிஷி கடல் நீரை எல்லாம் தன் உள்ளங் கையில் ஏந்திக் குடித்துவிட்டார். நீர் வற்றிப் போனதும் கடலுக்குள் இருந்த எல்லாப் பொருள்களும் தெளிவாகத் தெரிந்தன. மலை உச்சி ஒன்றின் மேல் விருத்திராசுரன் தவம் செய்து கொண்டு அமர்ந்திருந்தான். உடனே தேவேந்திரன் தனது புதிய வச்சிராயுதத்தால் அசுரனது தலையை அறுத்துத் தள்ளினான். பிரம்மஹத்தி தோஷம் இம்முறையும் தேவர்கோனைப் பற்றிக்கொண்டது.

விருத்திராசுரப் பிரம்மஹத்தியானது இந்திரனைப் படுத்திவைத்தபாடு கொஞ்சநஞ்சமல்ல. இந்திரன் என்ன செய்வான் பாவம்! பயமடைந்த இந்திரன் வேகமாக ஓடிச் சென்றான். வடகிழக்குத் திக்கிலிருந்த தாமரைக் குளத்திற்குள் மூழ்கினான். தாமரைத் தண்டு ஒன்றின் நூலுக்குள்ளே தன்னை ஒளித்துக்கொண்டான். தேவேந்திரன் இல்லாத தேவலோகம் ஒளியும் அழகும் குறைந்து விட்டது.

இதற்கிடையிலே நகுஷன் என்பான் அசுவமேத யாகங்கள் செய்து இந்திரபதவி பெற்றான். அவன் கர்வம் பிடித்தவனாகவும் அகம்பாவம் கொண்டவனாகவும் அலட்சியம் நிறைந்தவனாகவும் இருந்தான். தவிர இந்திராணியையும், சப்த ரிஷிகளையும் மிகவும் அவமதித்ததால் சாபம் பெற்றுப் பாம்பாகி மண்ணில் விழுந்தான். தலைவனை இழந்த தேவர்கள் செய்வது இன்னது என்று தெரியாது தங்கள் பெருமதிப்பிற்குரிய குருவாகிய வியாழ பகவானிடம் சென்று தங்கள் வருத்தத்தைத் தெரிவித்து விண்ணப்பித்துக் கொண்டனர். வியாழ பகவான் வடகிழக்குத் திக்கிலிருந்து தடாகத்திற்குச் சென்று ஒளிந்துகொண்டிருந்த இந்திரனைக் கூவி அழைத்தார். இந்திரன் வெளிப்பட்டு வந்தான். வியாழ பகவான் இந்திரனை தன்னுடன் அழைத்துக்கொண்டுகிளம்பினார். இந்திரன் தனது குருவை மிகுந்து பணி வோடு வணங்கி எளியேனை வாட்டுகின்ற இந்தத் தோஷம் நீங்கும் வகை எது? அருளவேண்டும் எனப் பணிவோடு வேண்டினான்.

***(ஆதாரம் : புலவர் மணி எழுதிய திருவிளையாடற்புராணம் வசனம்)***

***(தொடரும்...)***

---

ஆன்மீக அன்பர்களும் கோவிலூர் மடாலயத்தின் நிகழ்வுகளில் ஆர்வம் கொண்ட பக்தர்களும் திருநெல்லை அம்மன் பெயரில் வெளிவரும் ஆன்மீகத் திங்கள் இதழுக்குச் சந்தா செலுத்தி உறுப்பினராகுமாறு வேண்டுகிறோம்

– பதிப்பாசிரியர்